



# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
32nd year
of Publication
7—5—1967


# பழுதுபட்ட எந்திரம்

— சாலை இளந்திரையன் —

வெள்ளையர்கள் நமக்குப் பல தீமைகளைச் செய்தார்கள். தங்களை அறியாமலே சில நன்மைகளையும் நமக்குச் செய்துவிட்டுப் போனார்கள். அதாவது, தங்கள் நலனுக்காக அவர்கள் செய்த சில காரியங்களால் நமக்கும் நன்மை ஏற்பட்டது. அப்படி ஏற்பட்ட நன்மைகளிலே ஒன்று, கிராமம் தொடங்கித் தலைமைச் செயலகம் வரை படிப்படியாகத் தொடர்பு விடாமல் அமைந்த ஆட்சி எந்திரம்.

தங்களுக்கு எதிராக ஏற்படக்கூடிய கலகங்களை அடக்குவதற்குப் படைகளை விரைவில் கொண்டு செல்லவே ஆங்கிலேயர்கள் நாடெங்கும் இருப்புப் பாதை அமைத்தார்கள்; அது இப்போது நமக்குப் பெரிய போக்குவரத்துச் சாதனமாகப் பயன்படுகிறது. நாட்டின் பல்வேறு மூலை முடுக்குகளிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளை அறியவும் விரைவாகத் தங்களுக்குள் செய்தி அனுப்பிக் கொள்ளவுமே தபால் தந்திச் சாதனங்களை அவர்கள் அமைத்தார்கள்; அவை இன்று நமது செய்திப் போக்குவரத்து அமைப்புகளாகச் சிறக்கின்றன. அதேபோல், நாட்டில் எங்கெங்கே என்னென்ன தொழில்கள்? அவற்றில் எவ்வளவு உற்பத்தி? யார்யார்வசம் அந்த உற்பத்தி எந்த அளவில் போய்ச் சேருகிறது? என்பன போன்ற விவரங்களைத் தெரிந்து கொள்ளுவதற்காகவே 'ரெவினியூ டிபார்ட்மெண்ட்' என்னும் பெரிய எந்திரத்தை அமைத்தார்கள். நாட்டின் எங்கோ மூலையில் விளையும் ஒரு நெல்மணி அல்லது ஒரு புளியம் பழம் கூட இந்த எந்திரத்தின் கண்களுக்குத் தப்பி விடாதபடி, அது செயல்படுமாறு திட்டம் வகுத்தார்கள்.

இந்த அருமையான எந்திரத்தை வைத்துக் கொண்டும், நமது ஆட்சியாளர்கள் நாட்டிலே பஞ்சக்குரலும் பட்டினிக்குரலும் எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள் என்றால், அது, 'ஆடத்தெரியாதவள் என்னவோ கோணல் என்று சொன்ன கதை'யைத் தவிர வேறில்லை.

இந்த ஆட்சி எந்திரம், நாட்டிலே பயிரிடத் தகுந்த நிலம் எவ்வளவு என்று கணக்கெடுத்திருக்கிறது; அந்த நிலத்தில் என்னென்ன பயிராகின்றன என்பதையும் கணக்கெடுத்து வைக்கிறது. அவ்வப்போது இவைகளில் ஏற்படும் வளர்ச்சி தளர்ச்சிகளையும் அது உடனுக்குடன் பதிவு செய்துவிடுகிறது. இந்த எந்திரத்தின் மற்றொரு பகுதி நாட்டில் உள்ள மக்கள் தொகை எவ்வளவு என்றும் அவர்களுக்குத் தேவையான உணவின் வகையும் தொகையும் எவ்வளவு என்றும் கணக்கு எடுக்கிறது. இந்தப் புள்ளி விவரங்களெல்லாம் ஒன்று திரட்டப்பட்ட மொத்த விவரப்பட்டியல், அரசாங்கத்தின் தலைமைச் செயலகத்தில் தயாராக வைக்கப்படுகிறது.

இந்தப் புள்ளி விவரத்தை ஊன்றிக் கவனித்தால், நாட்டில் அவ்வப்போது உற்பத்தியாகும் உணவுப் பொருள் எவ்வளவு? நாட்டு மக்களின் தேவை எவ்வளவு? எந்தப் பகுதியில் எவ்வளவு தேவை? என்பன போன்ற விவரங்களை முன்கூட்டியே கணித்து விடலாம். கணித்துத் தெரிந்து கொண்டால், அதிகமாக உள்ள இடத்திலிருந்து தேவையான இடத்துக்கு உணவுப்பொருளை அனுப்பலாம்; நாடு முழுமைக்குமே தேவை என்றால், அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யலாம். இதிலே கவனம் செலுத்தி வந்தால் கடைசி நேரத்தில், 'அம்மா பசிக்குதே,' என்று நாடு தோறும் திருவோடு ஏந்த வேண்டியதே இல்லை.

அருமையான மேற்படி எந்திரத்தைக் கைவசம் வைத்துக்கொண்டு, 'உணவுப் பிரச்சனை தீர வழி சொல்லுங்கள், கேட்கிறோம்' என்று ஆளவந்தவர்கள் ஆலோசனைப் பிச்சை கேட்பது வேடிக்கையாக இருக்கிறது.

ஆங்கிலேயர் அமைத்த ஆட்சி எந்திரம் அவர்களின் நலனுக்காகவே அமைக்கப்பட்டது. ஆயினும் நமது திட்டங்களை நிறைவேற்ற நல்ல கருவியாக அது அமைந்துள்ளது. அதில் உள்ள ஏகாதிபத்திய அம்சங்களை மட்டும் சிறிதே மாற்றினால் அந்த எந்திரத்தைப் போலப் பயன் மிக்க சேவைகளை எங்கும் காண முடியாது. ஆனால், நாடாள வருகிறவர்களுக்கு அந்த எந்திரத்தைப் பற்றிய முழு விவரமும் தெரியவேண்டும்; ஏகாதிபத்தியத்துக்கும் குடியாட்சிக்கும் உள்ள வேறுபாடுகள் என்ன, அவைகளை இந்த எந்திரத்தில் திருத்தி அமைப்பது எப்படி என்ற விவரமும் தெரியவேண்டும். அப்போதுதான், நெற்களஞ்சியங்களில் எலிகளைத் தேடுகிறவர்கள், இந்த எந்திரத்துக்குள்ளே பழம் பெருச்சாளிகள் இருந்து வருவதைக் காண்பார்கள்.

இதுவரை நம்மை ஆண்டு வந்தவர்களிலும் இப்போது ஆள வந்திருப்பவர்களிலும் பெரும்பாலோருக்கு இந்த எந்திரத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது, எனவே அவர்கள் 'கூட்டைக் கலைப்பானேன், தேனீ கொட்டுவானேன்?' என்று பயந்துகொண்டு அதை அப்படியே விட்டுவிட்டார்கள். ஆமாம்; விவரம்

தரியாதவர்கள் அதில் கைவைக்காமல் தங்கள் காலத்தைத் தள்ளிவிட்டுப் போய்விடுகிறார்கள்.

இந்த ஆட்சி எந்திரத்தைச் சரியானபடிச் செயல்படுத்தினால் நாட்டில் அவ்வப்போதைய நிலை உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தலைமைச் செயலகத்தில் வந்து தெரியும்; இதைப் பெருச்சாளிகளிடம் விட்டுவிட்டாலோ, 'பார்பர் ஷாப் கண்ணாடி' மாதிரி ஒவ்வொன்றையும் அது வேறுமாதிரிக் காட்டும். இப்போது பெருச்சாலிகளின் டைரக்ஷனில் இயங்கும் அந்த எந்திரம், 'புள்ளி விவரம்' என்ற பெயரில் புள்ளிக்கு உதவாத பொய் விவரங்களையே தருகிறது. அதை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்பட்ட திட்டமும் பெரும் சிக்கல்களை எழுப்புகிறது......

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன், அதாவது, நாடு சுதந்திரம் பெறுவதற்கு அய்ந்து ஆண்டுகளுக்கு முன்பு இந்த எந்திரம் செயற்பட்ட முறையை விளக்கும் நிகழ்ச்சிகளில் ஒன்று பின்வருமாறு:

திடீரென ஒருநாள் தாலுகா அதிகாரியிடமிருந்து அழகையா என்னும் கிராமவாசிக்கு ஒரு கடிதம் வருகிறது. அதில், 'உம்முடைய ஒருபோக நிலத்தில் நீர் இரண்டு போகம் பயிரிட்டு அரசாங்கச் சட்டத்தை மீறியதால், நீர் வழக்கமாகக் கட்டிவரும் நிலத்தீர்வையைப் போல் இருபது மடங்குத் தொகை அபராதமாக விதிக்கப்பட்டுள்ளது என்ற செய்தி காணப்படுகிறது. கடிதத்தைப் படித்ததும் பதறிப் போகிறார் அழகையா. காரணம், அந்த ஆண்டு அந்த நிலத்தில் அவர் இரண்டாவது போகம் பயிரிடவே இல்லை.

அப்படியானால் அவருக்கு அபராதம் விதிக்கப்பட்டது ஏன்?... எல்லாம் கர்ணம் என்னும் கணக்கன் செய்த வேலை.. 'கணக்கனைப் பகைத்தான் காணி இழந்தான்' என்ற பழமொழியையே உண்டாக்கிவைத்த புண்ணியவான் அல்லவா, அவன்...

கடிதத்தை எடுத்துக் கொண்டு கணக்குப்பிள்ளையிடம் ஓடுகிறார் அழகையா. 'நான் பயிரிடவில்லையே' என்று அவர் எழுப்பிய மறுப்புக்குக் கணக்கன் நேராகப் பதில் சொல்லவில்லை; இருக்கிறபடி இருந்தாத் தெண்டத் தீர்வை (அபராதப்) ஏன் வருது? என்று முணுமுணுத்துக் கொண்டே அவரை ஓரக் கண்ணால் பார்க்கிறான்...

அழகையாவுக்கு இப்போதுதான் உண்மை விளங்குகிறது; ஒருபோக நிலத்தில் இரண்டாம் போகம் பயிரேற்றிய மாரிமுத்துவுக்கும் செல்லத்துரைக்கும் தெண்டத் தீர்வை இல்லை; பயிரிடாத அவருக்கு அபராதம். 'சரிதான், லாஞ (அதாவது லஞ்சம்) பண்ணுகிற வேலையா?'

நிலங்களில் பயிர் விவரம், விளைச்சல் விவரம் சேகரித்து மேலே அனுப்பவேண்டியது கணக்கப்பிள்ளையின் வேலை. அவன் லஞ்சம் கொடுப்பவரின் கணக்கை ஒரு மாதிரியும் கொடாதவரின் கணக்கை ஒரு மாதிரியும் எழுதிக் கொண்டிருந்தான். அவைகளைக் கொண்டு தொகுக்கப்பட்ட புள்ளிவிவரமும் தவறாகவே இருந்தது.

இதே எந்திரம் சுமார் பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன், அதாவது சுதந்திரம் வந்து ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு செயற்பட்ட விதத்தை விளக்குகிறது பின்வரும் நிகழ்ச்சி:

ஒரு ரெவினியூ இன்ஸ்பெக்டரின் அலுவலகம்... அவருடைய மேற்பார்வைக்கு உட்பட்ட கணக்கப்பிள்ளைகள் பலரும் அங்கே கூடி இருக்கிறார்கள். தங்கள் தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட கிராமங்களின் பயிர்நிலைகள், நோய்நிலைகள், விளைவுநிலைகள் முதலியனபற்றிய புள்ளி விவரம் தயாரிக்கவே கூடி இருக்கிறார்கள். யாரிடமும் எந்தக் குறிப்பும் இல்லை; முந்திய ஆறுமாதத்துக்கு அனுப்பிய புள்ளி விவரப் பட்டியலின் நகல் மட்டும் ரெவினியூ இன்ஸ்பெக்டரின் கையில் இருக்கிறது.

''சோளம்?'' ரெவின்யூ இன்ஸ்பெக்டர் கேட்கிறார். ஒவ்வொருவரும் தமது கிராமத்தில், அந்த ஆறுமாதத்தில் எவ்வளவு நிலத்தில் சோளம் பயிரிடப்பட்டது என்று சொல்லவேண்டும். ஒருவர் எழுந்து சொல்லுகிறார்: ''நூத்தி நாப்பது ஏக்கர்'' ரெவினியூ இன்ஸ்பெக்டர் தமது கையிலிருக்கும் நகலைப் பார்க்கிறார் அவர் முகம் கோபக் குறி காட்டுகிறது: ''என்னய்யா, உளர்றே. முந்தின தடவை இருநூத்திப் பத்து ஏக்கர், இந்தத் தடவை ஏன் கொறைஞ்சுதுண்ணு கேப்பானே, என்னபதில்சொல்லுவே?...'' கணக்கப்பிள்ளையின் முகத்தில் பேய் அறைகிறது. தலைகுனிந்தபடியே, மெதுவாக, ''அப்பொ எரணூத்தி இருவதுண்ணு போட்டுடுங்க'' என்கிறார்.

இப்படியே நெல், சாமை, தினை முதலியவை பயிரிடப்பட்ட நிலப்பரப்பு, அவைகளின்விளைச்சல் எல்லாவற்றிலும் ''வளர்ச்சி''யே காட்டும் விவரம் தரப்படுகிறது. குழந்தைகள் பிறப்பு விகிதமும் அப்படியே கொடுக்கப்படுகிறது. வாந்திபேதி, அம்மை முதலிய நோய்களில் இறந்துபோனவர்களின் தொகைமட்டும் முன் பட்டியலைவிட ஒன்றிரண்டு குறைத்துப் போடப்படுகிறது...!

ஒவ்வொன்றையும் அவ்வப்போதே பதிவு செய்து வைத்திருந்து கணக்குப்பண்ணி அனுப்பவேண்டிய ''பிள்ளைகள்'' ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வீட்டில் உட்கார்ந்தபடியே புள்ளி விவரம் தயாரித்து விட்டார்கள்...

இப்போது நமக்குச் சுதந்திரம் வந்து இருபது ஆண்டு ஆகிறது. மேலே குறித்த நிலைமைகள் மாறி விட்டனவா என்றால், அணுவளவும் மாறவில்லை. காரணம், ஆளவரும் புத்தக அறிஞர்களிலே பெரும் பாலோருக்கு இந்த உலகம் தெரியவே தெரியாது. தெரிந்திருந்தாலும், ''இந்தத் தவறான புள்ளி விவர நாடகமே நாட்டின் முன்னேற்றத்தைப் பாதிக்கிறது'' என்பது அவர்களுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால், அந்த எந்திரத்தின் இந்த அடித்தளத்தை

[ 8-ம் பக்கம் பார்க்க ]



# இராமசாமிப் பெரியார்

— கோவை அ. அய்யாமுத்து

தி. மு. க. வை ஆதரிப்பதெனத் திருச்சியில் கூடிய தி. க. தீர்மானித்து விட்டதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

ஆச்சாரியார் — அண்ணாத்துரை அச்சை முறிப்பதற்கு இதுதான் சிறந்த வழியெனப் பெரியார் தமது பக்த கோடிகளின் மனதில் பதியச் செய்திருப்பார். அப்பக்தர்களும் பலே பலே எனக் கோஷித்திருப்பார்கள். ஆனால் நாயக்கரின் எண்ணம் அதுவல்லவே.

இராமசாமிப் பெரியாரை உள்ளும் புறமும் சரியாக எடைபோட்டுத் தெரிந்தவர்களில் மிகச் சிலரே இன்று உயிரோடிருக்கிறார்கள். தி. க. விலும், தி. மு. க. விலும் திரண்டிருக்கும் புதிய பதிப்புகளுக்கு நாயக்கரின் தாடியும் மீசையும் தெரியுமே அன்றி அவரது ஆசாபாசங்கள் யாதென அறிய மாட்டார்கள்.

இதோ 44 ஆண்டுகளுக்கு முன்னர் சென்னிமலையிலே, நிகழ்ந்த பொதுக்கூட்டமொன்றில் நாயக்கர் நிகழ்த்திய நகைச்சுவைமிக்க சொற்பொழிவிலிருந்து ஒரு சிறு பகுதியை எனது நெஞ்சகத்திலிருந்து தருகிறேன்.

நாயக்கர் சொல்கிறார்:

'இந்த நாட்டை விஜய நகர சமஸ்தானாதிபதிகளாகிய நாயக்கர்கள் ஒருகாலத்தில் ஆண்டிருந்தார்கள். அவர்களுக்குப்பின் மொகலாய வம்சத்தினர் சில காலம் ஆண்டிருந்தார்கள் என்பது சரித்திரம் படித்தவர்களுக்கு தெரியும் அந்த அரசவம்சத்தினரைச் சார்ந்தவர்கள் என்று தங்களைக் கருதிக் கொண்டிருக்கும் சிலர், அந்த அரசபீடத்தை விட்டு விலகுவதற்குப் பிரியமற்றவர்களாய் இன்றும் அங்கே சூழ்ந்திருக்கிறார்கள் என்று நான் சொன்னால் உங்களில் அநேகம்பேருக்கு விளங்காது. ஆனால் நீங்கள் எந்தக் கச்சேரிக்காகிலும் சென்றுபாருங்கள். அங்கே வாசலில் நிற்கும் வில்லைச் சேவகன் பட்டை நாமம் தீட்டிய நாயக்கனாய் இருப்பான், அல்லது தாடிக்காரத் துலுக்கனாய் இருப்பான். முன்சீப்பு அல்லது ஜட்ஜு வீற்றிருக்கும் மேடையை எட்டிப் பாருங்கள்; அங்கும் ஒரு துலுக்கனோ அல்லது நாயக்கனோதான் 'பங்கா' இழுத்துக் கொண்டிருப்பான். இது அவர்களது பூர்வ ஜன்ம வாசனையென்று நீங்கள் சொன்னாலும் எனக்கு ஆட்சேபணை கிடையாது.

மற்றும் பாருங்கள்: இந்துஸ்தானி பேசும் சாயபுகளில் பலபேர் ஜட்கா வண்டி ஓட்டுந்தொழிலை வெகு பிரியமுடன் மேற்கொண்டிருப்பதைக் காணலாம். ஏன் என்றால் ஆளும் வம்சத்தைச் சார்ந்தவர்கள் ஆதலால் எப்போதும் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கவே பிரியப்படுகிறார்கள். ஹய், ஹய், சல்சல் என்று சதா சாட்டையை வீசிக் கொண்டேயிருப்பது நவாபுகள் அந்தக் காலத்தில் குதிரைகள் மீதேறி சவாரி செய்ததை நினைப்பூட்டுவதாக அவர்கள் எண்ணி மகிழ்ந்து அத்தொழிலில் ஈடுபட்டு இருக்கிறார்கள்.

எனக்குத் தெரிந்த நண்பர் மிகப் பெரிய பணக்காரராய் இருந்தார். அவர் செல்வமனைத்தையும் தாசிவேசிகளுக்குக் கொடுத்துக் கொடுத்து இப்போது மஞ்சள் கடுதாசிவாங்கிக்கொண்டார். என்றாலும் தாசித் தெருவை விட்டு விட அவருக்குப் பிரியங் கிடையாது. இரவு பகல் என்று பாராது எப்போதும் அத்தெருவில் அலைந்து கொண்டு அங்கு வருகிறவர் போகிறவர்களுக்கு ஏதேனும் சிறிய ஊழியம் செய்து கொண்டேயிருக்கிறார்.

மற்றும் பாருங்கள் குடிகாரர்கள் இருக்கிறார்களே அவர்கள் குடிப்பதற்கு மடியில் காசில்லாதபோதும் கள்ளுக்கடைக்குப் போக தவறமாட்டார்கள். சொல்லப்போனால் கையில் காசில்லாதபோதுதான் கள்ளுக்கடையை வட்டமிட்டுக் கொண்டே இருப்பார்கள். பிறர் குடித்துவிட்டு எறியும் கலயங்களை எடுத்து முகர்ந்து பார்ப்பார்கள். அதில் காணப்படும் கொஞ்ச நஞ்சம் கள்ளையெடுத்து தங்கள் மீசைகளில் துடைத்துக் கொள்வார்கள். சாயங்காலம் வீடு திரும்பும்போது குடித்து வெறி பிடித்தவர்களைப்போல் உளறிக் கொண்டே செல்வார்கள். கையில் காசில்லாமல், கள்ளுக்கடைக்குப் போக வில்லையென்று பிறர் மோசமாக எண்ணிவிடக் கூடாதல்லவா?'

படித்தீர்களா, நாயக்கரின் நகைச்சுவைமிக்க பேருரையின் ஒரு பகுதியை. அவர் சொன்ன குடிகாரனைப் போன்று, அவருக்கும் யாதொரு செல்வாக்கும் அற்றுப் போனதாகப் பிறர் எண்ணிவிடக்கூடாது என்பதற்காகவே இன்று நாயக்கர் தி. மு. க. மந்திரி சபைக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யக் கிளம்பியிருக்கிறார் என்று யாராவது சொன்னால் நீங்கள் அவர்கள் மீது கோபங்கொள்ளக் கூடாது.

இதோ, நாயகர் பெருமான் தமது வாழ்நாளில் புரிந்துள்ள அதிசய சம்பவங்கள் சிலவற்றையும் படித்து இன்புறுங்கள்.

1. 1921ல் காந்தியடிகள் பேச்சைக்கேட்டுத் தெரியாத்தனமாகக்கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டு அந்நாளில் இந்நாட்டை யாண்ட ஆங்கிலேயரின் அதிருப்திக்கு ஆளானார். அதற்குப் பிரயசித்தமாக, இந்நாட்டுக்கு வந்த சைமன் கமிஷனை சகல கட்சியினரும் ஒரு முகமாய் எதிர்க்க நாயக்கர் மாலை போட்டு வரவேற்கும்படி அறிக்கை விடுத்தார். ஆங்கிலேயர் இந்நாட்டை

[6-ம் பக்கம் பார்க்க]



ஒளி : 32 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | 1967
இதழ் : 24 | | மே: 7

# மக்கள் தொடர்பு

மக்களிடம் மீண்டும் நேர்த் தொடர்புகொண்டு அவர்களின் நம்பிக்கையைப் பெறுவது ஒன்றுதான், இழந்த செல்வாக்கை மீட்டுக் கொள்வதற்கு ஒரே வழி என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி கண்டுபிடித்திருக்கிறது. இந்த உண்மையை இவ்வளவு விரைவாகவும் தெளிவாகவும் கண்டுபிடிக்க முடிந்தது மிகவும் சிறப்புத்தான். ''நிழலருமை வெயிலிலே'' என்ற முதுமொழி எவ்வளவு பொருள்உடையது!

மக்களிடம் தொடர்பு கொள்ளக் கிடைத்த 20 ஆண்டுகளில் நாம் என்ன செய்தோம். மக்களுடன் தொடர்புகொள்ளவிரும்பாமல் விலகிப் பதவிச் செருக்கில் ஆழ்ந்திருந்தோம். ஆங்காங்கு நமக்கு வேண்டிய எடுபிடி ஆட்களையும், அடியாட்களையும் நமது ஸ்தானிகர்களாக வைத்து அவர்களை கட்டிக் காத்தோம். உண்மையான தொண்டர்கள், உழைப்பாளிகள் தியாகிகள் யாராவது எஞ்சியிருந்தால் அவர்களை முடக்கி மூலைக்கு அனுப்பி வைத்தோம். ஆங்காங்கு அதிகாரிகள் நம்மைக்கண்டு அஞ்சிநடுங்கும்படி பார்த்துக் கொண்டோம்.

அவ்வளவு சிறப்பும் ஒரு நொடியில் பாழாய்ப் போய் முடிந்த பிறகு இப்பொழுது தான் நமக்கு ஞானம் பிறக்கிறது. மக்களிடம் தொடர்பு கொள்ளவேண்டுமென்றஉண்மையும் நமக்கு ஐயந்திரிபற விளங்குகிறது.

எப்படித் தொடர்பு கொள்வது. அவர்களிடம் போய்ச் சொல்வதற்கு நம்மிடம் என்ன சேதி இருக்கிறது. ஜனநாயக சோஷலிசம் என்று தத்துவம் பேசுவதா? அல்லது மக்களின் மனப்பாங்கில் சிறந்த கொள்கைகள், நப்பிக்கைகள் உருவாகுமாறுசெய்ய நம்மிடம் ஏதாவது உயர்ந்த கொள்கைகள் இன்னமும் உள்ளனவா?

அஹிம்சை, சத்யம், மது விலக்கு, தீண்டாமை விலக்கு, கதர், சுயதேவைப் பூர்த்தி இவற்றுள் எந்த ஒன்றின் பேரைச் சொல்லிக்கொண்டு மக்கள் முகத்தில் விழிப்பது? இவற்றையும் இவற்றை நமக்களித்த மகானையும் நாம் சிலுவையில் வைத்து அறைந்து பல ஆண்டுகள் ஓடி மறைந்து விட்டன.

தொலையட்டும், மறுபடியும் நாம் உயர்ந்த கொள்கைகளையும் உன்னதலட்சியங்களையும் வகுத்துக் கொண்டு பக்தியுடன் பின்பற்ற முடியுமானால் இன்னமும் மக்களிடம் செல்லும் தகுதியை நாம் பெற முடியும். ஆட்சிப்பெருமையை யாரிடமோ விட்டுவிட்டு, கட்டுப் பெட்டிகளைப்போல் கொள்கைகளை நம்பவும் கொண்டு செலுத்தவும் நம்மில் எத்தனைபேருக்குப் பைத்தியம் பிடிக்கப் போகிறது. என்பது கேள்வி.

இன்றைய ஆட்சியைக் குறை கூறுவதும் அவர்கள் தவறி விழுந்தால் தட்டிவிட வாய்ப்புக் கிடைக்காதா என்ற மனப்பாங்குடன் மக்களிடம் செல்லலாமென்றும் இழந்த செல்வாக்கை மறுபடியும் பெறலாமென்றும் தப்புக் கணக்குப் போட்டுப் பயனில்லை.

# நவீன சாதனங்கள்

மொழிபெயர்ப்பாளர்களுக்கான ஆராய்ச்சி சோதனைக் கூடம், மேற்கு ஜெர்மெனியில் மெயின்ஸ் பல்கலைக் கழகத்தில் வெளிநாட்டினர் மொழிபெயர்ப்பாளர் நிலையத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஐரோப்பாவிலேயே மிகப் பெரியது இது. இந் நிலையம், ஒரு கோட்டையில் அமைந்திருக்கிறது. சுமார் 17·5 இலட்சம் ரூபாய் செலவில், இக்கோட்டை புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பலவித நவீன நுணுக்கமான இயந்திர சாதனங்கள் இங்கு பயன்படுத்தப்படுகின்றன.

ஒவ்வொரு அறையிலும் 'மைக்ரோ போன்கள்', 'இயர் போன்கள்', மற்றும் பொத்தானை அழுக்கினால் பேசுவதற்கான வசதி போன்றவைகள் அமைக்கப் பட்டுள்ளன. இது தவிர 'டேப் ரிக்காடிங்' கருவிகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. பிரதான மண்டபத்தில் கேட்பவர்களின் வசதிக்காக, 'ஒயர்லஸ்' ஒலி பரப்புக் கருவிகளும் இருக்கின்றன.

'டேப் ரிக்கார்டர்' மூலமாக, காதில் பொருத்தப்பட்ட 'இயர் போன்' வழியாக குறிப்பிட்ட பேச்சை ஆசிரியர் கேட்கின்றார்; மற்றொரு 'இயர்போன்' மூலமாக மாணவரின் மொழி பெயர்ப்பையும் கேட்கிறார்; அதாவது எந்த நிமிஷத்திலும், எந்த மாணவருடனும் ஆசிரியர் தொடர்புகொண்டு, அவரது மொழிபெயர்ப்பைக் கேட்கலாம்; அவசியமானால் மொழிபெயர்ப்பைத் திருத்தலாம்.

ஜெர்மன் மொழிப் பள்ளியின் நடவடிக்கைகள், குறிப்பிடத்தக்கவை. 'ஒலி பயிற்சிக்கூடம்' இங்கு செயல்படுகிறது. கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் வானொலி நிலையங்களின் நிகழ்ச்சிகள் இங்கு 'டேப்—ரிக்கார்டிங்' கருவியில் மீண்டும் ஒலிபரப்பப்படும்போது, சொற்களின் உச்சரிப்பை மாணவர்கள் கற்றுக்கொள்கிறார்கள். ஒவ்வொரு பிரதேசத்திலும் குறிப்பிட்ட சொற்றொடரை எவ்விதம் உச்சரிக்கிறார்கள் என்பது இதன் மூலம் மாணவர்களுக்கு கற்றுத்தரப்படுகிறது.

தற்போது சுமார் 400 ஜெர்மானியர்களும், 300 வெளிநாட்டினரும், இங்கு மொழிபெயர்ப்பாளர்கள் பள்ளியில் சேர்ந்து பயிலுகிறார்கள். இதில் குறிப்பிடத்தக்க விசேஷம் என்னவென்றால், பெரும்பான்மையானவர்கள் பெண்களே! பயிற்சி பெறுகிற ஐந்துபேர்களில் நால்வர் பெண்கள். கடந்த சில ஆண்டுகளாக மொழிபெயர்ப்பாளர்வேலை, பெண்களின் வேலையாகிவிட்டது; இங்கு தற்போது பிரெஞ்சு, இத்தாலி, ஸ்பானிஸ், போத்துகீஸ், அராபிக், ருசியா, போலிஷ், ஆங்கிலம், ஜெர்மனி ஆகிய மொழிகள் கற்றுத் தரப்படுகின்றன.

அடுத்த ஆண்டு முதல் டச்சுத் மொழியிலும் மொழி பெயர்க்கக் கற்றுத் தரப் படும். (யூ பி. எஸ்)

— —

# விண்கூடு பயணம்

சந்திரன் அருகே சென்று அதை பிரதட்சிணம் செய்தவாறு புகைப்படம் எடுத்து அனுப்புவதற்காக '4-வது லூனர் ஆர்பிட்டர்' என்ற விண்வெளிக் கூட்டை அமெரிக்க விஞ்ஞானிகள் விண்வெளியில் ஏவியிருக்கிறார்கள்.

——

# இந்திய சர்வே பிரிவு

இந்திய அரசாங்கத்தின் சர்வே பிரிவு துவங்கப்பட்டு இருநூறு ஆண்டுகள் பூர்த்தியாகின்ற. நாட்டின் பாதுகாப்புக்காகவும் அபிவிருத்திக்காகவும் கடந்த சில வருடங்களில் இப்பிரிவு பணியாற்றியிருப்பதைப் போல வேறு எந்த அரசாங்க ஸ்தாபனமும் இயங்கவில்லை என்று சொல்லலாம்.

1947-ம் ஆண்டில் அமைக்கப்பட்ட இந்தியச் சர்வே பிரிவு இந்திய அரசாங்கத்தின் மிகப் பழமையான விஞ்ஞான பிரிவாகும். இந்தியாவில் பூகணித, பூபௌதிக ஸ்தல விவரண சர்வேக்கள் நடத்தி, வரைபடங்கள் தயாரிப்பதற்கு இந்தப் பிரிவுதான் பொறுப்பு வகித்து வருகிறது.

துல்லியமான ஸ்தல விவரண வரைபடங்கள், நாட்டின் பாதுகாப்புக்கும், நிர்வாகத்திற்கும் அபிவிருத்திக்கும் மிக மிக முக்கியமானவை. எனவே இந்திய சர்வே பிரிவு விசேஷ முக்கியத்துவம் வகிக்கிறது. பூகணித சர்வே, சர்வே புகைப்படங்கள் தயாரிப்பு, வரைபட தயாரிப்பு ஆகிய விஷயங்கள் பற்றி இந்திய அரசாங்கத்திற்கு சர்வே பிரிவு ஆலோசனை கூறி வருகிறது.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில், பாதுகாப்பு சர்வேக்கும், இந்தியாவின் வெளி எல்லையை நிர்ணயம் செய்யும் பணிகளும் உட்பட ஸ்தல விவரண சர்வேக்கள் தயாரிப்பதில் பிரிவு முக்கியமாக ஈடுபடும். இதற்காக, இந்தியச் சர்வே பிரிவைச் சேர்ந்த ஊழியர்கள் இதுவரை யாரும் அணுகியிராத பகுதிகளுக்கும், மனித வாழ்க்கை ஏற்படாத பகுதிகளுக்கும் அடர்ந்த காடுகளுக்கும், வடக்கிலும், கிழக்கிலுமுள்ள மலைப் பகுதிகளுக்கு செல்ல வேண்டியிருக்கும்.

நான்காவது திட்டகாலத்தில் சுமார் 200 அபிவிருத்தித் திட்ட சர்வேக்களை இந்தப் பிரிவு நடத்தும்.

முதலாவது திட்டத்தில் 70 சர்வேக்களும், இரண்டாவது திட்டத்தில் 90 சர்வேக்களும், மூன்றாவது திட்டத்தில் 150 சர்வேக்களும் நடத்தப்பட்டன. அவற்றில் கேரளகடலோரப் பாதுகாப்பு திட்டம், கோதாவரி திட்டம், மேற்கு வங்காலத்தின் ஃபராக்கா அணைக்கட்டுத் திட்டம், உத்தர்ப்பிரதேஷின் காண்டக் நதிப்பகுதி சர்வே ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

நான்காவது திட்டத்தின் போது அபிவிருத்தித் திட்டங்கள் தவிர பல விசேஷத் திட்டங்களையும் இப்பிரிவு மேற்கொள்ளும்.

ஐ. நா. விசேஷ நிதி ஸ்தாபனம் உதவி அளிக்கும் வனவள திட்டம் பற்றிய சர்வே நடத்துவதற்காக, மத்திய உணவு விவசாய இலாகாவின் ஒத்துழைப்புடன் வனத்துறை சர்வே குழுவொன்றை பிரிவு அமைத்திருக்கிறது. ஆந்திரா ஹிமாச்சல் பிரதேஷ், மத்தியப்பிரதேஷ், உத்தர்ப்பிரதேஷ் ஆகிய ராஜ்யங்களில் சுமார் 4,000 சதுர கிலோ மீட்டர் பரப்புள்ள பகுதியில் அமைந்திருக்கும் வனவளம் பற்றிய ஆதார வரைபடங்களை இந்தக் குழுவினர் தயாரிப்பார்கள். மேலும், அஸ்ஸாம், மைசூர், மத்தியப் பிரதேஷ், ஹிமாச்சல் பிரதேஷ் ஆகிய ராஜ்யங்களில் ஆறாயிரம் சதுர கிலோ மீட்டர் பரப்புள்ள வனப் பகுதிகள் பற்றிய சர்வேக்கள் நான்காவது திட்டகாலத்தில் மேற்கொள்ளப்படும்.

—

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

விட்டு ஒருநாளும் போகக்கூடாது என பத்தி பத்தியாய் எழுதினர். தெருத் தெருவாய்த் தமதாசை தீரப்பேசினர்.

2. அக்காலத்தில் இம்மாநிலத்தையாண்டிருந்த ஜஸ்டிஸ்கட்சிக்குத்தாஸாதிதாஸராய் விளங்கினர். பனகல், முனுசாமி, பொப்பிலி, சுப்பராயன், மந்திரி சபைகளுக்கு ஆதரவாய் நின்று மாலைகளும், மரியாதைகளும் பணமுடிப்புகளும் பெற்று மகிழ்ந்தார்.

3. அவர் காங்கிரசை விட்டுக் கிளம்புவதற்கு காரண பூதராயிருந்த இராஜாஜியின் மந்திரி சபை 1937ல் ஏற்பட்டவுடன் அதை எதிர்க்க இந்தி எதிர்ப்பு இயக்கத்தைத் தொடர்ந்தார். எனினும் இராஜாஜியைத் தாம் பூஜிக்கும் 'அய்யா'வாகவே கருதி வந்தார். அதனால் தானே அவரைத் திருவண்ணாமலையிலே கண்டு தரிசித்து மணியம்மையை திருமணம் செய்துகொள்ள அவரது ஆசியை வேண்டினர்.

4. இரண்டாவது உலக யுத்தத்தின்போது தேச மக்கள் யாவரும் பிரிட்டிஷ் ஆட்சியை பகிஷ்கரித்திருக்கும் காலையில் நாயக்கர் பெருமான் தமது 'விடுதலை'த் தாளை அவர்கட்கீந்து இராஜவிஸ்வாசியாய்த் திகழ்ந்து, கைநிறைய சன்மானமும் பெற்ருர்.

5. அப்புறம் நடந்த காமராஜ் சகாப்த கால நிகழ்ச்சிகள் அனைவரும் அறிந்தவை. அவரது வெறுப்புக்கும் அவமதிப்புக்கும் ஆளாகியிருந்த காமராசர் ஆட்சிபீடத்தமர்ந்ததும், பச்சைத் தமிழனாய், பாமரர் தோழனாய், சமதர்ம தீரனாய், ஆச்சாரியாரை ஒழித்துக்கட்டிய சூரனாய் விளங்க அவரது கைகளைப் பலப்படுத்த நாயக்கர் படாதபாடுகள் பட்டார். அவரது நிந்தனைக்கு ஆளாகியிருந்த காங்கிரஸ், அவரது வந்தனைக்கு ஆளாகியதுடன், அவர் சிபாரிசு செய்த ஆட்களெல்லாம் பதவியும் பவிசும் பெற அதன்மூலம் அவரது செல்வாக்கும் செல்வமும் வளரத் தொடங்கின.

6. எக்காரணங்கொண்டும் கண்ணீர் துளிகள் வெற்றிபெறக் கூடாதென்று கங்கணங்கட்டிக்கொண்டு கடுஞ் சமர்புரிந்த நாயக்கரின் நாவிலே இன்று திடும் பிரவேசமாகத் தி. மு. க. மந்திரி சபை அமைந்ததும், நீர் சொட்டுகிறது. ஆட்சி பீடத்தில் யார் இருப்பினும் அவர்களை அண்டி அணுகித் துதிபாடாது நாயக்கரால் இவ்வுலகில் காலந்தள்ள முடியாதென்று நான் சொல்லவா வேண்டும்?

நாயக்கர் ஜஸ்டிஸ் கட்சி ஆட்சிப் பிரசாரகராய்த் திகழ்ந்திருந்தபோது அவருக்குச்சென்றவிடமெல்லாம் பூமாரிகளும், பாமாலைகளும் கரன்ஸி நோட்டுமாலைகளும் கிடைத்தன.

நாயக்கர் காங்கிரஸ் கட்சியை அதாவது காமராஜர் கட்சியை ஆதரித்துப் பிரசார யாத்திரை செய்தபோது காங்கிரஸ்காரர்களில் பலர் அவரைக் காரில் வைத்து ஊர்வலமாகத் தாங்களே தப்பட்டை கொட்டி இழுத்துச் சென்ருர்கள்! கம்ஸ மகாராஜனை இரதத்தில் வைத்துச் சாதுக்களும் சந்நியாசிகளும் இழுத்துச் செல்வதாகத் திரைபடங்களிலும், நாடக மேடைகளிலும்நடைபெறும் காட்சியைப்போல அது திகழ்ந்தது.

இனிவரும் நாட்களிலே, அண்ணுவுக்குத் துணையாக அய்யா கிடைத்துவிட்டாரென்று திண்மையும் தீரமும் மிக்க தி. மு. க. தொண்டர்கள் நாயக்கர் பெருமானின் புகழைத் திசையெட்டும் கேட்குமாறு கொட்டி முழக்குவார்கள். தி. மு. க. மந்திரிகளுக்குக் கிடைக்கும் சிறப்பெல்லாம் நாயக்கருக்கும் கிடைக்கும். காங்கிரஸ் ஆட்சிகாலத்தில் பதவிக்கும் பவிசுக்கும் தேடியலைந்த நாயக்கரின் பக்தர்கள், மீண்டும் நாயக்கரின் இல்லத்தை நாடி அவரது செல்வத்துக்கும் செல்வாக்கிற்கும் உறுதுணையாக நிற்பார்கள்.

ஆனல்,

அந்தோ நாயக்கர் பெருமான் இதுகாறும் தொட்டது துலங்கியதில்லை; வைத்தது விளங்கியதில்லை. அவரணைந்த ஆங்கிலராட்சி நடுராத்திரியில் அழிந்தது. அவர் போற்றிப் புகழ்ந்த தென்னிந்திய நலவுரிமைச் சங்கத்தை அவரே குழி தோண்டிப் புதைத்தார். அவர் ஆரம்பித்த சுயமரியாதை இயக்கம் சுடரற்றுப் போயிற்று. அவரது திராவிடக் கழகம் திசை தெரியாத கலமாய்த் தத்தளித்து தவிக்கிறது. அவரது நீண்ட கால நிந்தனைக்கும் சமீப கால வந்தனைக்கும் ஆளான காங்கிரஸ்கட்சி இவ்வாண்டு தேர்தலில் சிதறுண்டு போயிற்று, இனி அந்தோ, அய்யோ, அம்மாவோ, அவர் தழுவப்போகும் தி. மு. க. வும் அதன் ஆட்சியும் எக்கதிக்காளாகுமென்று ஆருடமா கேட்கவேண்டும்?

தி. மு. க. மத துவேஷத்தையும் இன துவேஷத்தையும் மாற்றி, அதற்கொரு மகத்தான விளக்கமும் திருப்பமும் தந்து காசிமுதல் கன்னியாகுமரிவரை மக்களின் ஆதரவையும் நல்வாழ்த்துக்களையும் அதற்குத் தேடித்தந்த இராஜாஜியின் எண்ணத்தில் மண் விழ செய்யவும் தி. மு. க. வை அடிபாதாளக் குழியில் வீழ்த்தவும், நாயக்கர் இதோ புறப்பட்டு விட்டார். இனி அவர் பவனிவரும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்து ஊதுமினே கொம்பு ஒலியுமினே பிணப் பறைகள்!

வாழிய நாயக்கர்!

# பிடில் தயாரிப்பு தொழில்

டச்சு தேசம், இசை விரும்பிகள் மிகுந்த தேசமாக இருப்பதால் இசைக் கருவிகள் தயாரிப்பதில்கூட டச்சுக்காரர்கள் சிறந்த நிபுணர்களாக இருக்கிறார்கள் என்பதில் உண்மையாகவே ஆச்சரியப்படுவதற்கு ஏதுமில்லை. பியானோ, கெய்ட்டர், காரில்லோன் போன்ற இசைக் கருவிகள் தயாரிப்பதற்கு என்று டச்சு நாட்டில் ஏராளமான சிறிய தொழிற்சாலைகள் இருக்கின்றன. இந்தத் தொழிற்சாலைகளில் இன்னமும் பிடில் (வயலின்) தயாரித்து வருகிறார்கள். இந்த பிடில் இசைக் கருவிகள் மிகச் சிறந்தவையாக இருக்கின்றன என்று, பிரபல இசை நிபுணர்களெல்லாம் பாராட்டியிருக்கிறார்கள்.

17ம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் வயலின் தயாரிக்கும் தொழில் நுட்பத் திறனுக்காக அன்ட்வெர்ப்புக்குக் கிடைத்த புகழை ஆம்ஸ்டர்டாமும் பங்கிட்டுக் கொண்டதாகத் தெரிகிறது. அந்த நாட்களில் வயலின் தயாரிக்க இத்தாலிய முறையைப் பின்பற்றியதாக, இங்கு பொதுவாக நம்பப்படுகிறது.

மாக்ஸ்முல்லர், டச்சு இசை அறிஞர். புதிய பாணி வயலின் கருவியை உருவாக்க வேண்டுமென்பதே இவருடைய நோக்கமாக இருந்து வருகிறது. இந்த கலை நுணுக்க வேலைக்கு இவர் பொறுத்தமானராகவும் காணப்படுகிறார். ஏனென்றால், சிறந்த ஐரோப்பிய வயலின் தயாரிப்பாளர்களின் கீழ் இவர் பல ஆண்டுகளாகப் பயிற்சி பெற்றிருக்கிறார்.

ஒரு வயலின், எப்படி உருவாகிறது? இதன் ரகசியம் வார்னிஷில்தான் இருக்கிறது என்கிறார் இந்த டச்சு இசை நிபுணர். 17, 18வது நூற்றாண்டுகளின் வயலின் கருவிகளில், "வார்னிஷ்" கொடுக்கப்பட்டிருக்கும் விதம் பற்றி ஆராய்ந்து, இந்த ரகசியத்தை முதன் முதலாக ஒரு ரஷ்யக்காரர் தான் கண்டுபிடித்தார். கடந்த நூற்றாண்டின் கடைசிக் காலத்தில், அந்த ரஷ்யக்காரர் ஆம்ஸ்டர்டாமில் வந்து வாழ்ந்தபோது, இந்த ரகசியத்தை திரு. மாக்ஸ் முல்லரின் தந்தைக்குச் சொல்லி கொடுத்தார்.

ஆனால், ஒரு வயலினில், நல்ல ஒலியை எழுப்புவது, அதில் பயன்படுத்தப்பட்டிருக்கிற மரமா, உருவமைப்பா, சேலைத் திறனா அல்லது வார்னிஷா என்பதில், வயலின் உற்பத்தியாளர்களிடையே கருத்து வேறுபாடு இருக்கிறது.

ஆனால், வார்னிஷ்தான் இவையெல்லாவற்றிற்கும் மேலாக நல்ல வயலின் என்பதைத் தீர்மானிக்கும் அம்சமாக விளங்குகிறது என்று திரு. மாக்ஸ்முல்லர் கூறுகிறார். உண்மையாகவே, அவரும், அவரது தந்தையும், எழுப்பும் ஓசைக்காகவே உலகப் புகழ்பெற்ற வயலின்களையும் செய்திருக்கிறார்கள்.

ஒரு வயலின் செய்வதில், மரவேலை, (ஐந்தாண்டுப் பயிற்சியில் இந்த வேலையைச் சிறப்பாகக் கற்றுக் கொள்ளலாம் என்றாலும்) மிகச் சிரமமான ஒன்று என்பது ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். ஆனாலும் இதில் எப்படி வார்னிஷ் பூசுவது என்னும் கலையை நீங்கள் கற்றுக்கொள்ளவில்லை என்றால், நீங்கள் ஒரு நல்ல வயலின் தயாரிப்பாளராக ஆகமுடியாது.

இன்னும் ஏராளமான விஷயங்களையும் இந்த டச்சு இசை நிபுணரிடமிருந்து கற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு கருவியிலும், மிக நுணுக்கமான பாகங்கள் இருக்கின்றன, உடனடியாக அவை, அதன் தயாரிப்பாளரைக் காட்டிவிடும். ஸ்டார்டிவாரியஸ் தரமுள்ள ஒரு வயலினைப் பார்த்தபோது, அவ்வளவு சிறந்த வயலினைச் செய்த அந்த தயாரிப்பாளரின் மகன்கள், அந்தக் கருவியில் எந்தெந்த பாகங்களை செய்தார்கள் என்பதையும் அவர் சுட்டிக் காட்ட முடிந்தது. அத்துடன், ஒரு வயலினைப் பார்த்ததும், அந்த வயலினைச் செய்தவரின் வயதை சற்றேறக் குறைய சொல்லி விட முடியும் என்று திரு. மாக்ஸ் முல்லர் கூறுகிறார்.

வயலின் செய்வதில் வார்னிஷ் பூச்சி, மரவேலை முதலிய அம்சங்களில் பெற்ற ஐந்து பேரை இவர் தமது தொழிற்கூடத்தில் வேலைக்கு வைத்திருக்கிறார். திரு. மாக்ஸ் முல்லருக்குப் பின்புறமுள்ள சுவற்றில், வயலின்கள் சில இருப்பதைப் பார்க்கலாம். இவற்றைத் தன் உற்ற நண்பர்கள் என்று கொண்டிருக்கும் திரு. மாக்ஸ் முல்லருக் அவரது சக நண்ப கோஷ்டியினரும், இந்த வயலின்களைப் பற்றி பரிசீலித்து வருகிறார்கள். ஏனென்றால், ஒவ்வொரு வயலினும், இவை ஒரே மரத்தினால் செய்யப்பட்டவை என்றாலும் மனித முகங்களைப்போல் தனித் தன்மை கொண்டவையாகும்.

இதில் திருப்தியளிக்கக் கூடிய விஷயமாக இருப்பது, திரு. மாக்ஸ் முல்லரின் 22 வயது மகன் தன் குடும்பப் பாரம்பரிய வேலையான பிடில்தயாரிப்பு வேலையைத் தாமும் மேற்கொள்ளப் போவதாகக் கூறியிருக்கிறார்.

---

## புத்தக ரேடியோ

புத்தக வடிவில் குட்டி ரேடியோ ஒன்றை டச்சு பிலிப்ஸ் கம்பெனி தயாரித்திருக்கிறது. ஒரே வடிவமாக வார்க்கப்பட்ட பிளாஸ்டிக் கூண்டினால், சிறிய ரேடியோ அமைக்கப் பட்டிருக்கிறது. பார்ப்பதற்குப் புத்தகம் போல இருக்கும். இரண்டாகத் திறந்து மூடலாம்; மறை ஆணி எதுவும் கிடையாது. ரேடியோவின் மேற்புறத்தில் ரேடியோவை இயக்குவதற்கான கைப்பிடிகள் இருக்கின்றன. இவற்றை இயக்குவது மிகவும் சுலபம்.

## புதுமையான ரொட்டி தயாரிக்கும் இயந்திரம்

ரொட்டி தயாரிக்கும் இயந்திரங்களைத் தயாரிக்கும் 'டிரிட்டர்' என்னும் டச்சு ஸ்தாபனம், மற்றொரு அதிசயமான கருவியைத் தயாரித்திருக்கிறது. இயந்தின் அடிப்பாகத்தில் உலை இருக்கும். ரொட்டி சுடும் இயந்திரத்தில், பிசைந்த மாவினை பல அளவுகளில் வைத்து, உலையின் மேலாக வைப்பார்கள். இது நெருப்புக்கு அருகில் சுற்றி வருவதைக் கண்காணித்து தக்க தருணத்தில் தானாகவே வெளியே கொண்டு வருவதற்கு இந்த இயந்திர சாதனம் உதவி செய்கிறது.

## இராட்சத பளு தூக்கும் மோட்டார்

புல்டோசர், எக்ஸ்கவேட்டா மண் தோண்டும் இயந்திரம் போன்ற பெரிய பளுவான இயந்திரங்களைத் தூக்கிச் செல்லக்கூடிய இராட்சத மோட்டார் 'டிரெய்லர்' ஒன்றை டச்சு கம்பெனி தயாரித்திருக்கிறது. பளுவுக்குத் தகுந்தபடி சக்கரங்களை உள்புறமாகவோ, வெளிப்புறமாகவோ சற்று நகர்த்தி வைத்துக் கொள்ள, இதில் வசதி இருக்கிறது. கனமான இயந்திரங்களை இதன்மீது எளிதாக ஏற்றி இறக்கவும் வசதி செய்யப்பட்டிருக்கிறது.

# ஸ்ரீ ராமநவமி விழா

## ஜாம்ஷெட்பூர்

வட இந்தியாவிலுள்ள பிஹார் மாகாணத்தைச் சர்ந்த ஜாம்ஷெட்பூர் (டாடாநகர்) மதராஸிஸம் மேளனியின் ஆதாவில் 9-4-67 முதல் 18-4-67 முடிய ஸ்ரீராம நவமி உத்ஸவம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தஞ்சை, "ஹரிகதாமிர்தவர்ஷிணீ" குமாரி வி. மங்களம் கோஷ்டியாரின் ஹரிகதைகள் தினசரி மாலை நடைபெற்றது. குமாரி ராஜலக்ஷ்மி கோஷ்டியாரின் நாதசுரமும், தஞ்சை — பண்டித சிரோமணியின் ஸ்ரீ ஏ. எஸ். ரங்கநாதாச்சாரியாரின் சொற்பொழிவும் ஒரு நாள் இடம் பெற்றது. பொதுக் காரியதரிசி ஸ்ரீ பி. ஆர். டி. ராஜன் கலைஞர்களைப் போற்றி வரவேற்ருர். தலைவர் ஸ்ரீ சி. ஆர். அய்யங்கார் நன்றி கூறினுர். 'அக்ரிகோ'விலும் ஒரு நாள் விழா நடந்தது.

## சிந்திரி

பிரபல உரச்சாலை உள்ள சிந்திரியில் 16-4-67 முதல் 3 தினங்கள், ஸ்ரீ ராம நவமி விழா நடைபெற்றது. 2 தினங்கள் குமாரி வி.மங்களம் கோஷ்டியாரின் ஹரிகதை இடம் பெற்றது. ஸ்ரீ ஆர். பி. ராவ் அவர்கள் மங்களத்தின் பக்தியையும், கலைத்திறனையும் போற்றிப் பேசினுர். காரியதரிசி எம். சீனிவாசன், கமிட்டி அங்கத்தினர்களான ஸ்ரீ பி.கே.ராமன், ஸ்ரீ கிருஷ்ணன், முதலிய கலைஞர்கள் விழாவைச்சிறப்பிக்க எல்லா ஏற்பாடுகளையும் செய்தனர்.

## கல்கத்தா

கல்கத்தா, ஸ்ரீ தியாகராஜா ஹாலில், தென்னிந்திய பஜனை ஸமாஜத்தாரின் பேராதரவில் 18-4-67 முதல் 24-4-67 முடிய ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம் நடைபெற்றது.

தஞ்சை, ஹரிகதாமிர்தவர்ஷிணீ, குமாரி வி. மங்களம் கோஷ்டியார் 4 தினங்கள் தொடர்ந்து ஹரிகதை செய்தனர். தஞ்சை, பண்டித, சிரோமணி ஸ்ரீ A. S. ரங்கநாதாச்சாரியார் ஸ்வாமி, "ஸ்ரீராமனும் அடைக்கலமும்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினுர். குமாரி ராஜலக்ஷ்மி-ஸரஸ்வதி சகோதரிகளின் நாதஸ்வரமும் இடம் பெற்றது. உஞ்சவர்த்தி பஜனை, ஸ்ரீஸீதாகல்யாணம், ஊர்வலம் யாவும் சிறப்பாக நடைபெற்றன. கமிட்டித் தலைவர் ஸ்ரீ எஸ்.வி. நரஸிம்மன் கலைஞர்களைப் போற்றி வரவேற்ருர். செயலர் ஸ்ரீ வி. ராமச்சந்திரன் அனைவருக்கும் நன்றி கூறினுர். ஷ தஞ்சை, குமாரி மங்களம், இவ்வாண்டிற்கான "ஹரிகதை"ப் போட்டியில், தமிழ்நாடு சங்கீத நாடக சபையாரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

### மாதர் சங்கத்தில் வரவேற்பு

ஸௌத்இந்தியா கிளப், மாதர் பகுதியினரால் தென்னிந்திய கலைஞர்களான குமாரி V. மங்களம் (ஹரிகதை), குமாரி ராஜலக்ஷ்மி, சரஸ்வதி (நாதசுரம்) ஆகியோருக்கு 24-4-67ல் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது. குமாரி வி. மங்களம் "ஸ்திரீதர்மம்" என்பது பற்றி உபன்யஸித்தார் – விஜயா கிருஷ்ணன், ஸ்ரீமதி நரஸிம்மன் – வரவேற்று நன்றி கூறினுர்.

— —

# ஆறு மாதமானுலும் கெடாத பால்

பாலைப் பதனப்படுத்தி பாதுகாத்து வைக்க டச்சு ஸ்தாபனம் ஒன்று, தானியங்கி இயந்திரம் ஒன்றைத் தாயாரித்திருக்கிறது.

இந்த இயந்திரத்தின் ஒரு பகுதியில் பால் நன்கு காய்ச்சப்படுகிறது; பிறகு திடீரென்று குளிரவைக்கப்படுகிறது; பின்னர் அரை லிட்டர் அளவுள்ள 'பிளாஸ்டிக்' குவளைகளில் பால் ஊற்றப்பட்டு, நன்கு அடைக்கப்படுகிறது. பாலைப் பயன்படுத்தியதும், 'பிளாஸ்டிக்' குவளையை விட்டெறிந்துவிடலாம்; குவளையில் இருக்கும் பால் சாதாரணமாக ஒரு மாதம் வரை கெடாமல் இருக்கும். ஆனுல், ஆறு மாதம் வரை இப்பால் கெடாமல் வைத்திருக்க முடியும் என்று விஞ்ஞானிகள் கூறுகிருர்கள், எவ்வளவு நாளானுலும், பாலின் சுவையோ மணமோ சிறிதும் குன்றுவதில்லை.

— —

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

அல்லவா முதலில் சரிசெய்திருப்பார்கள்!

இந்த எந்திரத்தில் ஏறியுள்ள துருவையும் ஏற்பட்டுள்ள பழுதையும் கண்ணேட்டமின்றி நீக்கினுல், ஆட்சியிலே பெரிய பிரச்னைகளுக்கு இடமே இல்லை. இவற்றை நீக்குவதும் அப்படி ஒன்றும் பெரிய காரியமல்ல. ஆனுல் இவற்றை நீக்கப் புறப்படுவது யார்? இந்தப் பெருச்சாளிகளை விரட்டத் தடியைத் தூக்க வேண்டியவர்களிலே பலர், நேற்றுவரை அந்தப் பெருச்சாளிகளிடமே லஞ்சம் கொடுத்துக் காரியம் செய்தவர்கள்; சிபாரிசுக்குப் போய் நின்றவர்கள்! முற்பகல் செய்த அந்த வினை இப்போது கையை ஓங்கவிடாதபடிப் பிடித்துக் கீழே இழுக்கிறது. என்ன செய்வது?

ஆட்சியில் இருப்பவர்கள் நாட்டைப் பற்றிய முழு விவரத்தையும் (அதாவது உண்மையான விவரங்களை) இந்த எந்திரத்தைச் சரிசெய்தோ தங்கள் கட்சித் தொண்டர்களைக் கொண்டோ தெளிவாகத் தொகுக்க வேண்டும்; அவ்வப்போது திருத்தித் தொகுக்க வேண்டும். "கட்சித் தொண்டர்களை இந்தமாதிரி வேலைகளுக்கு அனுப்பினுல் ஆபத்து!" என்று அரசகோபாலர்கள் அபயக்குரல் எழுப்பிக் கொண்டுதான் இருப்பார்கள். அவர்களை நினைத்துப் பயந்து, அடிப்படையைச் சரிசெய்யாமல் மேற்பரப்பிலே ஆட்சி நடத்தினுல் எந்தப் பிரச்சினையையும் சரியானபடி தீர்க்க முடியாது. தனிமனிதர்களுக்குச் சுதந்திரம் அவசியமே. ஆனுல் அந்தச் சுதந்திரத்தால் அவர்கள் எலிகளும், பெருச்சாளிகளும் ஆகி ஆட்சிஎந்திரத்தையே கீழறுக்கும்படி விடுவது சுதந்திரம் ஆகாது. இதைப் புரிந்துகொண்டு செயல்பட்டால் பல பிரச்சினைகள் எழவே மாட்டா; எழுகின்ற சில பிரச்சினைகளும் வெகு எளிதில் தீர்ந்து போகும்.

நமக்குக் கிடைத்துள்ள ஆட்சி எந்திரம் "பேடியின் கையிலுள்ள ஒளிமிக்க வாளாக" இல்லாமல் வீரன் கையிலுள்ள வெற்றி வாளாக விளங்க வேண்டும்.

— —

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbersRs. 10.